திசைப்புறுத லுறுஞ்சீவர்க காவனவாம் இவற்
றின்-றிரமனைத்து முறைபிறழா தினியெடுத்து
மொழிவாம். 107

திருசிய விவேகம் முற்றிற்று.

---

புன்னெறிகொள் குடும்பியாய் வலியறு
மோர் சித்துப்-போலியாஞ் சீவனுயர் சுருதிவிசா
ரத்தின், முன்னமொரு தன்சொருப மாகியபே
ரொளியா-முதற்றுரிய நிலையறியா திருந்திடலஞ்
ஞாநம், பின்னொருகா லுயிரியல்பு கூறுமிடத்
தின்று-பிரத்யகாந் மாத்தோன்று தெனுங்கலக்க
மிரண்டும், பன்னியவஞ் ஞாநகா ரியமாகு மென்
னப் - பகர்தருமா வரணமென்பர் பலகலைகற்
றுணர்ந்தோர். 108

கருத்தனுமொண் கருமபல போத்திருவுந்
தானுய்க்-கருதியுடம் பபிமாநி யாஞ்சீவன் றனே,
யுரைத்தலரும் விட்சேபஞ் சுருதிகுரு வுண்மை-
யுரையாலுண் டுயிரெனவே யறிதலசத் தென்னு,
நிரைத்தமுத லாவரண நிவர்த்தகமாம் பரோட்ச-
நீபிரம மெனும்வேத மொழிவிசா ரத்தால், வரத்



துரியன் றனெனவே யறிந்திடுத லபாநா-வரண
நிவர்த் தகமாகு மபரோட்ச ஞாநம். 109

துரியநிலை யடைந்ததற்பி னுன்கருத்த னுன்
போத் -திருவென்னும் சீவவுருத் துக்கமகன் றிடு
தல், அரியதெனு மச்சோக நிவிர்த்தியாஞ் செய்
தே-யடைதலுறும் பலனனைத்து மடைந்தன
மென் றமைதல்,டரிவினிரங் கிசதிருத்தி யிரண்டு
மப ரோட்ச பலமாகு மறிவுருவா மாந்மாவிற்
கென் றுந், தெரியுமப ரோட்சமுள தாதலினு
லவற்குச், சேர்தலெவ்வா றஞ்ஞாந முதவனவிங்
கென்னில். 110

கடந்துநதி பதின்மர்தமை யெண்ணுங்கா
லொருவன்-கண்டுநவ புருடரைப்பத் தாமவன்று
னெனவே, யடைந்தறியா திருத்தலே யஞ்ஞாநம்
பத்தா - மவனிலைகா ணப்படா னென்னுமிரு
பிராந்தி, இடும்பைதரு மாவரண நதியுளவ னிறந்
தா - னெனுந்துக்கம் விட்சேபம் வேறுரியன்
மொழியாற், கிடந்ததொரு துறக்கமென வுளனெ
னவே யறிதல்-கிளர்ந்தவவ னிலையென்ற லொடு
பகைத்தல் பரோட்சம். 111

சங்கநவ புருடரொடுமுறையெண்ணி நீயே-
தசமனெனத் தனைத்தானே யிருந்தபடி யடுத்தல்,
இங்குவரு தசமன்கா ணப்படானெனலோ-டிகலு
மப ரோட்சமா கதியுளிறந் தனனென்,றங்குவரு
துயரகறல் சோகநிவிர்த் தியதா-மடைந்துதன
தியனிலையிற் சுகித்திருத்த றூனே, தங்கநிரங்
கிசதிருத்தி யென்றறிக வினிமேற்-றூல்வேத
வாககியமாம் விசாரமெடுத் துரைப்பாம். 112

விரிந்தவிதி நிடேதஞ்சித் தார்த்தபோ தக
மாய்-வேதவாக் கியமூன்று திறனுகு மவற்றுள்,
வருந்திமக முதமனசெய் கென்றல்விதி விடுக-
மதுபானா திகளென்கை நிடேதம்விதி யின்றித்,
திருந்துசிவ வுயிரயிக்கப் பொருடனையே தெருட்
டல்-சித்தார்த்த போதகவாக் கியமாகு மென்பர்.
பொருந்துமறை நான்கினுநான் குளவாஞ்சித்
தார்த்த-போதகமா கியமகா வாககியங்க ளன்றே,

உரைத்தவையுட் சிறந்தன்று சாமமறை
புகலு-மோங்குதத்வ மசிமகா வாக்யெமங் கதற்
குப், பரத்தலுறு தற்பதந்தொம் பதத்தொடசி
பதமாய்ப்-பதமூன்றுஞ் சிவமுயிரங் கவற்றயிக்க



மூறையே, யருத்தமென லாம்பதமே பதார்த்த
மொடு வாக்கி-யார்த்தங்க டமக்குச்சம் பந்தமுறை
மூன்றும், விரிக்கிலவை தாஞ்சமா நாதிகர ணம்
பின்-விசேடவிசே டியமிலக் கியமொடிலக் கண
மாம். 114

அறைதலுறு பதங்கடமக் கிருபொருளிங் குள
வாம்-அவைவாச்சி யார்த்தமிலக் கியார்த்தமென
வவற்றுண், முறைமைதரு விராட்புருடன் முத
லாகி நின்ற-மூவுருவ வீசனுமப் பிரமமுமொன்
றாகிப்,பிறிதலற நிற்புழிதற் பதத்திற்கெய் துறுவ-
பெயர்வாச்சி யார்த்தமுக்கி யார்த்தமபி தார்த்த,
நெறிகொள்விசு வாதிகளுந் துரியனுமொன் றாகி
நிற்புழிதொம் பதத்திற்கு வருமம்மூ வகையும் 115

தற்பதத் தினுக்குவிராட் புருடாதி யகன்ற-
தனிநிருபா திகப்பிரம மேயிலக்கி யார்த்தஞ்,
சொற்பரவுஞ் சோதிதற் பதார்த்தமென நிற்
குந்-தொம்பதத்திற் குற்றவிசு வாதிகளின் வே
றும், பொற்பினிரு பாதிகமாந் துரியனிலக்
கியார்த்தம்-பொருந்துறுசோ திததொம்ப தார்த்

தமென லாகும், விற்பாவு மிலக்கணைவிட் டது
வும்விடா ததுவும்-விட்டுவிடா ததுவுமென
மூவகையா மன்றே. 116

கங்கையினி விடைச்சேரி மருவலுறுஞ்
சொல்லுங்-கவன்குந்த மொடுசோயங் தேவதத்த
னென்னு, மிங்கிவைக ளுதாரணமா மவற்றினுக்
குக் கெங்கை-யெனுமொழிநீர் வடிவாந்தன் முக்கி
யார்த் தத்தைத், தங்குமிடைச் சேரிதனக் கிட
மாகா மையிருற்-றணாந்துகரை காட்டுந்தன் முக்கி
யார்த் தத்தைத், துங்கமுறு குந்தமொழி விடா
மற்குந் தத்தைச்-சுமப்பவனைக் காட்டுமென
வுணர்ந்திடுக துணிந்தே. 117

முன்னமொழி தருஞ்சோயங் தேவதத்த
னென்னு-மொழியுண்முத லவனென்னு மொழி
யிறந்த காலங், தன்னில்வரு தேசவயோ விசிட்ட
னுந் தேவ-தத்தனைக்காட் டிடுமிவனென் மொழி
நிகழ்கா லத்தி, லுன்னவரு மவையுடைய தேவ
தத்தன் றன்னை-புணர்த்திடுமிவ் விருத்ததரு மப்
பொருள்க ளிரண்டு, மன்னுதல்செ யயிக்கமுரு



மையினுலப் பொருட்கண்-வருவிருத்த தருமங்க
ளனைத்தினையும் விட்டே. 118

விருத்தமறுந் தருமமாந் தேவதத்தன் றனை
யே-விடாதுகொளி னவனிவனே யிவனவனே
யென்னுந், தெரித்தலரி தாயதா தாந்மியங்கூ
டுறுமாற்-றேரினிதை விட்டுவிடா விலக்கணையி
னுடுதா, னருத்தவிலக் கணபாகத் தியாகவிலக்
கணையென் றறைதலினு லிதுவேதத் துவமசிவாக்
கியத்திற், குரைத்திடுவ ருதாரணமா யுரியதென
வுண்மை-யுணர்ந்துடையோ ரஃதெவ்வா றெ
ளின்முறையே யுரைப்பாம். 119

தற்பதம்வாச் சியார்த்தமா யெலாமறிதன்
முதலாஞ்-சற்குணங்கொள் பரோட்சனுஞ் சிவன்
றனையே யுணர்த்து,முற்பகருந் துவம்பதமுக் கிய
மாய்ச்சிற் றுணர்வு-முதலாய வீநகுண விசிட்ட
வப ரோட்ச, கற்பிதசீ வனையுணர்த்து மிம்மூரண்
கொள் பொருட்கே-கத்துவங்கூ டாமையினவ்
விருபொருளு மடையும், பற்பலவாம் பரோட்ச
முட னபரோட்ச மாகும-பகைத்ததரு மத்திறங்க
ளனைத்தினையும் விட்டே. 120

இகலிலா வறிவுமாத் திரமாகி நின்ற-விலக்கியமாம் பிரமகூ டத்தவுயிர் கொள்ளிற், புகரிலா வதுவிதுவே யிதுவதுவே யென்னப்-பொருந்துதா தாத்மியம்வர் துறுமெனவே யறிக, பகவிலா வசிபதமிவ் விலக்கியார்த் தத்திற்-பரோட்சவப ரோட்சங்கள் மாயாகற் பிதமென், றுகவிலா துணர்த்தியுறு பலமாமிம் முறையா-லொன்ருகு மறிவேயுண் டெனல்வாக்கி யார்த்தம். 121

தூயதத்வ மசிமகா வாக்கியத்தி ஞலே-தூரியபரற் குளதேகத் துவமென்கை கடாதி, யாயவுபா திகளாகற்றி விசும்பொன்றே யெனவு-மகற்றிமறு டத்தன்மை யிராமனே நீ தானே,மாயவன்கா ணெனவுங்கன் னனேவேடு கழித்து மகன்குந்திக் கெனவுமொரு தசமனேமாய் துயரம், போயகல வொழித்துநீ யேதசம னெனவும் புகலுதல்போற் சுபாவசித்த மாகுவதே யன்றி. 122

ஒருமலர்க்குத் துறக்கமெனல் போன்முத்தி விருப்ப- முதவருத்த வாதமெழிற் பதுமையைத்தே வெனல்போ, லிருமைதரு முபாசனா பரம நுடன் றன்னே-யிந்திரனென் பதுபோலத் துதி



பரமா ளினேயே,யருமரசென் பதுபோல வுபசாரிகந்தா - னக்கினிமா ணவகனெனும் வாக்கியமே போல, வுரிமைதரு சுகுணசா திரிசமிது கோவி-னுடம்பென்கை போற்சாதி வியத்தியா மன்றே,

கடத்தொடுமட் காகியமென் வாக்கியமே போலக் - காரியகா ரணநீலோற் பலமெனும்வாக்கியம்போல்,விடுப்பில்குண குணிதயிர்பாற்கபேத மெனல் போல-விகாரமே வாரிகணங் கட்கேக மெனல்போ, லடுத்தவம்சாம் சிகம்பிம்பப் பதிபிம்பங் களினுக்-கயிக்கமெனல் போல்விம்பப் பதிபிம்ப வாதம், எடுத்துணரில் னெவிங்ஙன் பேதபர மாக விசைப்பனவெ லாம்சுருதி விரோதமென வறியே 142

அவ்வகிலங் கட்கெல்லாம் பொய்ம்மையே புகலும்.அரியதாம் வேதாந்த பக்கமதி வினய-வெவ்வமறு சுருதிவிசா ரத்தினுல் உண்மை, யெனுமுத்தி கூடுமெனல் எவ்வாறிங் கென்னில், அவ்வியமென் சொற்பநமா தணவினுன் மெய்ம்மை-யாயவீ ரியவொழிவுங் கற்பிதமாம் வடிவிற், செவ்வியவொண் கடவுள்வழி பாட்டி

ணல் இட்டஞ்-சேர்தலும்போல் நூலுணர்வான்
முத்தியுஞ்சித் திக்கும். 125

அருமையெனு முத்திவிலக் காகமூன் றுள
வாம்-அஞ்ஞாம் ஐயமவிப ரீதமென வவற்றுட்,
பிரமமல நானென்கை யஞ்ஞாந நானப்-பிர
மமோ வலனோவென் றிடலையஞ் சுருதி, வருமி
ணிய வுத்திகளா னன்பரமா யினுமுன் வளர்சீவ
பாவமுண் டென்குதல்விபரீ தந்தான், றரு
முறையி லஞ்ஞாநா திகட்குமூண் ஆகுஞ்-சவண
மொடு மநநநிதித் தியாசங்க ளன்றே. 126

சூதகா திகளினிடைச் சுருதிவிசா ரத்தாற்-
றுணிவுதோன் றுதலெனவே சிவமொடுயி
ரயிக்க, மோதுமா ரணமொழியின் றாற்பரியங்
கேட்கை-யுயர்சவணங் கேட்டபொரு ளுத்தியிற்
சிந் தித்த, லிதின்மா மநநமவற் றுற்றுணிந்த
பொருளிற்-சித்தமசை வறவிருத்த னிதித்தியா
சகந்தான்,மேதையா கியசவண ஞாநத்தா லாங்யா-
மெய்ம்மையா முக்கியத்தாற் சவண ,ங்கி யென
லாம். 127



எனையவோ ரிரண்டுமதன் றுணையெனலா
லங்க-மெனலாகு மஃதெவ்வா றெனிற்பொருள்க
டிகழ்த்து, மானதோர் சுடரசையிற் கருமவவி
யின்று-மாதலினல் வளிநடுக்குந் திரையெனலா
மநந, மேனிமிர்வான் றிரிதூண்டி யொளிர்வித்
தல் போலும்-விளம்புநிதித் தியாசநமென் றறிந்
திடுக தெரிந்தே,மோனையா மெனவுரைத்த சிரவ
ணத்திற் குள்ள-முறையிலறு வகையிலிங்க தாற்
பரிய முரைப்பாம். 128

அவைகளுபக் கிரமமுப சங்கார முடனே-
யப்பியா சம்பினபூர் வதைபலமொ டுற்ற, நவி
லருத்த வாதமுப பத்தியென லாகு-நற்சிருட்டி
முன்சகமெய்ப் பரம யிற் றென்றுஞ், சிவமதற்
குச் சுவகதா திகளிலையென் றகண்டஞ்-செப்பு
மதே யுபக்கிரமஞ் சகஞ்சிவத்தின் மாய்த்துப்,
பவமகலத் துரியற்குப் பிரமமுட னையிக்கம்-
பகர்ந்தத்து விதங்கூற லுபசங்கா ரந்தான். 129

கூறுமிவை யிரண்டுமோ ரிலிங்கமென
வறைவர்--கூடத்த னேபிரம மெனமறித்து
மறித்துந், தேறவுரைத் திடலப்பி யாசமாந்

துரியன்-றிகழ்பிரமா ணுதீத னென்கையபூர்
வதையாம், பாறிலுயி ரொன்றறித லெலாமறித
லென்கை-பலம்பிரத்திய காங்மவுரு வாம்பிரமந்
தனக்கு, மாறரிய வைந்தொழிற்கர்த் திருத்துவஞ்
செப் புறுதல்- வயங்கருத்த வாதமென மதித்
திடுக தெரிந்தே. 130

கடத்தினுக்கு மண்ணினையு நூற்குலண்டு
தனையுங்-காரணமென் பதுபோலப் பிரமமே
முன்னம், படைத்தசகத் காரணமென் பதுவே
திட் டாந்தம்-பகருத்தி தர்க்கமநு மாநமிவை
மூன்று, மடுத்துவரு மாநசக காரிகளா மவற்று-
ளாருயிர்க ளநேகம்வியா பகமெனவே கூறுந்,
தடுப்பரிய சாங்கியமே முதலாய மதத் துட்-சாற்று
முயி ரெலாமுடம்பு தொறும்புணர்ச்சி யுறலால்.
131

இந்தவுடம் பிவற்கேயாம் போகசா தநமற்-
றேனோர்க்கன் றெனப்போகத் திதிபுகலொ
ணுதாம், வந்தவுடம் பெதித்றத்து மிவன்வினை
யான் வாலான்- மற்றிவற்கே டினின்வினையு
மெவர்க்குமில யோதான், முந்தையுடம் பபிமா



நத தாற்செய்வினை யிவற்கே-முற்றுமெனி னவ்
வபிமா நமுமுந்தை யுடல்சே, ரந்தவுயி ரனைத்
திற்கு மிலையோதா னிவ்வா-றநவவத்தை நீக்
கலரி தநாதியுயி ரெனலால். 132

செப்பரிய வேகாந்ம பக்கத்திற் போகத்-
திதியிலையென் றநேகாந்ம பக்கமது கொளினு,
மிப்பரிசு மிகுபோகத் திதிகூடா தாயிற்-றிச்
சங்கை யிருமதத்து மொக்குமே யென்னிற்,
பற்பலவி லேகாந்ம பக்கமதில் விம்பப்-பதிவிம்ப
நியாயத்தாற் காணவசை வாதி, மெய்ப்பரிய
பலதிறத்தா லெண்ணிகழ்ந்த போக-விளைவுகூ
டுதலெளிதென் குதலுத்தி யாமால், 133

தருக்கவநு மாநவிலக் கணங்கடா மிசிரா-
சாரியர்கண் முதலானோர் கண்டநா திகளில்,
விரித்தமைத லாலிதுதான் சுவாநுபவ நூலாய்-
விளங்குதலா லீண்டுரைப்பிற் பெருகுமெனும்
பயத்தா, லுரைக்கிலமந் திரயோகம் பரிசயோ
கம்பி-னுயர்பாவ யோகமுட னபாவயோ கந்
தான், றெரித்தமகா யோகமெனு மிவைகளோ

லைந்தும் - திகழ்கின்ற நிதித்தியா சனவடிவ மாமால், 134

ஓங்கார ரா திகள நுசந் தாநத்தாற் பரத்தி-லுள் ளமடங் குதலேமந் திரயோக மதனே, டீங்காகு மநபவந மொன்ருய்மூ லத்தி - னிருஞ்சுழினே வழிச்சென்று செந்நிறுடு விருந்த, மீதங்காந்ம வொளியின்மநோ லயமாதல் பரிசஞ் - சிறந்து றக்கஞ் செவிதிசைக ளிருசுடர்கள் விழிதீ, பாங்காய முகமுந்தி விசும்புநிலம் பதமாம்-பரம னுரு வாயவிராட் புருடவடி வெனினும். 135

அன்றியள வுறுபெருந்தோட் படைபணி யோ டேற்ற-வண்ணல்வடி வெளினுநினேந் தவய வங்க டம்மி, லொன்றொன்றை விடுத்தூநின்ற வயயவிமாத் திரமா - முண்மையாம் பிரமத்தின் மநமடங்கல் பாவஞ், சென்றளவு காணமுரு வொருபிரமந் தன்னிற்-சிந்தையடங் குதலபாவம் படைப்பி லொழிவிற், றன்றெரித றெரியாமை யிடத்திஞேர் பரிசாய்த-தன்வடிவாம் பிரமத்தின் மநமிறனமா யோகம். 136



பகர்ந்தவுயி ருண்மைவிலக் காகவரும் பூதப்-பிரதிபந்தம் வர்த்தமா நப்பிரதிபந் தம்பி,னிகழ்ந்த வா காமியப் பிரதிபந்த மெனமுத்தி-நேயமொடு துறந்துகுரு பரனேயறிந் தடைந்து, மகிழ்ந்துசவ ஞுதிகமுற் றிடினுமுன் னுகர்ந்த-வநிதாதி விடய சுக வாதனேயாற் றிநமும், புகுந்தமந நிலேகலக்கி யுயிருண்மை யுருமற் - போக்கியிட றனேபூதப் பிரதிபந்த மென்பர், 137

மடிவிடயா சத்தியபி மாநமொடு குதர்க்க-மறுகுறுசிற் றினஞ்சேர்தல் சபலத்து வாதி, யடைதலின்மெய் தெரிந்துமுயி ருண்மையுரு தழித்த-லதுவாகும் வர்த்தமா நப்பிரதிபந் தங் காண், விடலரிய சநநமினுஞ் சிலவடைந்தா லன்றி - விடாதுபிர மாதியுல கிச்சையெனுந் தோட, மொடுமருவி மறைப்பொருளே புணர்ந் திடினு மாந்ம-வுண்மையுரு தழித்தலா காமியப் பிரதிபந்தம் 138

பந்தமவை மூன்றினேயுங் கடந்திடுவான் பயில்வ-பகர்ஞாநம் வைராக முபரதியா மவற் றின், வந்தணுகு மிலக்கணங்கா ரணமொடுதான்

சொரூப-மருவுகா ரியமெனவே தனித்தனிஞா
னக்கு, முந்துசவ ஞ்ஞுதிகமே காரணமாங் மாவு-
மூலவகங் காரமும்வே ருச்குதலே சொரூபம்,
நந்துமகங் காரகத மயற்குத்தான் கரியாய-ரணு
குதலே கார்யமென் றறைகுவர்மூ தறிஞர். 139

வேண்டும்வை ராக்கியத்திற் குற்றவநி தாதி-
விடயத்தி னிலையாமை முதலாய குற்றங்,காண்ட
லது காரணமெத் திறத்தானு மதனைக்-கழன்றிடு
தல் சொரூபப்பின் பருமைகா ரியமா.மாண்டவுப
ரதிக்கியமா திகளேகா ரணஞ்சூழ்-மநமொடுங்கல்
சொரூபமாம் புறக்கருமந் தன்னின், மீண்டுபுகு
மயலறுதல் காரியமென் றிசைப்பர்-விளம்பலுறு
ஞானாதி கட்கவதி மொழிவாம். 140

தக்கதே காங்மபா வம்போலப் பிரமந்-தா
னென்னுந் திண்மைஞா னத்தினுக்கா மவதி, மிக்க
பிர மாதிபதந் துரும்பெனவே நினைத்தல்-விளம்
பும்வை ராக்கியத்திற் கவதிசுழுத தியன் ஃபாற்,
றொருக்ககரு மங்களனைத் தினையுநினை யாமை-
தோன்றுமுப ரதிக்கவதி யாகுமிவை மூன்றும்,
புக்கொருவ னடைந்திடுமே லதுமுன்னம் விடா



து-புரிந்தமா தவத்தின்வலி யென்றறிக
தெரிந்தே. 141

குறையகலும் வைராக்கிய முபரதியா மிரண்
டுங்-கூடிஞா னங்கூடா தாயின்முத்தி யரிதா,முறு
மினியமிசையுலக பதங்கிடைசகு ஞான-மொன்று
மடைந் தவையிரண்டு மிலையாயி னிற்ப,முறியுமர
நெடும்பணையோன் விழநினைவின் றியினு-முறிய
விழல் போலவே தேகாந்த மதனிற்,பெறுவனுயர்
முத்தியினை யுடற்கமைந்த வினையாற்-பிறந்திடுந்
துக் காநுபவ முளதாத றிண்ணம். 142

சாற்றரிய சுபேச்சைவிசா ரணைதநுமா நசிசத்-
வாபத்தி யசம்சத்தி பதார்த்தாபா வனையே, மேற்
றுரிய காமியெனு மிவற்றினைமூ தறிஞர்-விளங்கு
சத்த ஞானபூ மிகையென்ப ரவற்றுட், டோற்றிடு
நான் மூடனு யிருந்தகா ரணமென்-சுருதிகுரு
வாலறிவ லெனநினைதல் சுபேச்சை, மாற்றரிய
சுருதிகுரு வாற்சிறிது தோன்றும்-வைராகத் துற
தலசதா சாரம்விசா ரணையே. 143

மருவலுறு சுபேச்சைவிசா ரணைவலியால்
விடய-வலியறுத ருன்றநுமா நசியவற்றின் பயில்

வால், விரவுநா வாயவுல கினைக்கநவென றெண்ணி-மெய்த்தவாங் மாவுண்மை கருதல்சத்வாபத்தி, பரவலுறு மூலகுதோன் ரூதுசுழுத் தியன்போற்-பகரறிவு மாத்திரையாய் நிற்றலசம் சக்தி, யொருவிவா சனையனைத்து மிகுதியிலோன் போல-வுயிராநங் தத்தொடுங்கல் பதாத்தாபாவனையாம், 144

உன்டிலையென் னுமலகங் கிருதிநிர கங்கிருதி-யுரூமலறி வுருவாய வத்துவித பதத்திற், கண்டதொரு வறுங்குடம்போ லுட்புறஞ்சு நியமாங்-கதிதுரிய காமியா முபரதியை யடைந்து, கொண்டிலக லுறுதிரிசி யாநுவித்தம்பின் - கூறலுறு சத்தாநு வித்தநிரு விகற்ப, மெண்டருசட் சமாதிகளாம் புறமொட்க மென்னு - மிருபேதமடைந்தவற்றை முறையினிவண் மொழிவாம். 145

காதிவிட யத்தினிலொன் றினைக்குறித்து நாம-கற்பனையோ டுருவமெனு மரயையதன் திறத்தைத், தடாதுவிடுத் தத்திபா திப்பிரிய மென்னுஞ் சச்சிதா நந்தமாம் பிரமத்தின் றிறத்தை,



விடாதநுசந் தானஞ்செய் திடுதலே புறத்துமெய்த்திரிசி யாநுவித் தப்பெயர்கொள் கின்ற, கெடாததொரு சவிகற்ப சமாதியென லாகுங்-கிளர்ந்தபுறச் சத்தாநு வித்தமது கிளப்பில். 146

சச்சிதா நந்தவுரு வாகுவதே பிரமங்-தானெனவே தியானித்த லதுவாகு மெங்க, விச்சமாதிகள்பயின்ற வலியினாற் றோன்று-மிரும்பிரமாநந்தநிலை தனின்மனஞ்சென் றொடுங்கி. நிச்சலமாயலையில்கடல் போலிருத்தல் புறத்து-நிருவிகற்ப சமாதியா மனோகதகா மாதிக், கச்சமறு காரிதானென் றெண்ணுதலுட் டிரிசி-யாநுவித் தப்பெயர்கொள் சவிகற்ப சமாதி. 147

சங்கமறு சச்சிதா நந்தவொளி யுருவங்-தானெனச்சிந் தித்திடலுட் சப்தாநுவித்தம், பொங்குறுதன் னநுபூதி ரசநதோன்று மதனாற்-புகன்றதிரிசி யஞ்சப்த மெனுமிரண்டு மகன்றே, யிங்கசைவி றீபமெனப் பந்தமற விருத்தல்-இலங்குறுமுண் ணிருவிகற்ப சமாதியிவ்வா றூனுச், தங்கவுற வொழுகுமியோ கிக்குமந மெங்குச்-சரிக்குமாண் டாண்டெலாஞ்ச மாதியென லாகும். 148

தக்கமா ஞானபல நான்குதுக்கா பாவஞ்-சர்வ
கா மாப்தியொடு கிருதகிருத் தியமே, தொக்க
பிராப் தப்ராப் பியங்களென வவற்றுட்-சொல்
லியதுக் காபாவ மிகபரத்தா விரண்டாம், பொய்க்
குமோர் தூலவுடம் பொழிவெழிற் நாற்றம் புகு
பிணிகண் முதலனவுஞ் சூக்குமதே கத்து, மிக்க
கா மாதியுங்கா ரணத்தினிலவ் வா தி-வியா திகட்கு
வித்தாம்வா சனையுமிகத் திடும்பை. 149

மித்தையெனு மாயாகா ரியவுடம்பா திக
ளின்-வேறுய துரியஞா நத்தின்மே லாக,வைத்த
வொரு போக்கியபோத் திருக்களிலா மையினுல்-
வாஞாநிக் கவ்விடும்பை மூன்றுமிலா திருத்தல்,
பொய்த்தவிக லோகதுக்கா பாவமென லாகும்-
புண்ணிபம்வந் தென்றுபோம் பாவமென நின்ற
சித்தமுறு சிந்தனையே பரலோக துக்கந்-தெரியி
னெனப் புகன்றிடுவர் திருக்கறுநல் லறிஞர். 150

ஞாநிலை யடைதலுந்தா மரையிலைநீர் போல-
ஞாநியிரு வினையுமுறு மையினுலிந் தநத்திற்,
றீநணுகு மழலில்விற கிலாததுபோற் கருமச்,
செயலிலவ ணுமவனி லஃதிரா மையினுன்,மானழ



லுண் வநத்திலுரு ததுபோல ஞாந-மயனைவினை
யாவுமுரு மையினுலச் சிந்தை, தானவனி லெழா
திருத்த றனையுரைப்பர் மேலோர்-தக்கபர லோக
துக்கா பாவமென வன்றே. 151

எல்லாவாழ் வினையுமுறுஞ் சார்வபௌ மாதி-
இரணியகர்ப் பாந்தமாய் மேன்மேல்வேண்டுற்ற,
நல்லாநந் தங்களெலாம் பற்றிலா வறிஞ-னனுகு
தலான் ஞாநங்கொண் டிறிசிவத்தின் கூறுய்த்,
தொல்லாநந் தங்களெலா நிற்கையினு லவற்குத்-
தோமிலகண் டாநந்தச் சித்திதோன் றுதலே,
பொல்லாத வினைப்பகையைக் கடந்தபெருந் தவர்
கள்-புகன்றிடுவர் சர்வகா மாப்தியென வன்றே,

தத்துவஞா நத்திற்கு முன்னமிங் கடையத்
தக்கவிட்டம் பெறவனிட்ட வொழிவிற்கு
வேண்டி, வைத்தவுழ வாதிகளுந் துறக்கமுதல்
பெறற்கு-மகமுதலா யினவுமுத்தி சாதநமா ஞாந,
சித்தியுற மிகுசவணு திகமுமறி ஞர்க்குச்-செய்
வனவாந் தத்துவஞா நத்தின்பின் குடும்பப்,புத்தி

யொடு பலபோகத் திச்சையிலா மையினர்-புகன்
றழவு வாதிதொழில் யாவுமில்லை யாமால். 153

வந்துசிறு சூளரத்திற் றோன்றுபர மாணு-
வான்கதிரின் மிகுமொளியிற் றோன்றிடா வா
போ, னந்தலுறு சிற்றறிஞன் விடயமாங் கரும-
ஞாநியிடைத் தோன்றாமை யாலியற்றத் தக்க-
மூந்துமக முதலனவிங் கில்லைபிரமா நந்த-முதலுண்
மை யெய்தலாற் சவணுதி யெல்லாஞ்,சிந்தையுற
வியற்றுமள வாகுமதா விதுவே-செப்பியவக்
கிருதகிருத் தியத்தவமென் றறியே. 154

முற்றலுறு விசிட்டபுண் ணியபரிபா கந்
தான்-முத்திவிருப் பரியகுரு வழிபாடுபெருநூல
வெற்றிதரு சவணுதி யறிவறியா மைகளின்-
விவேகமிகு மஞ்ஞாந வழியொடுதன் னுண்மை,
பெற்றசமூ சார துக்க நிவிர்த்திநிசா நந்தப்-பே
றெய்த லேபிராப் தப்பிராப் பியமாம், பற்றுமுயர்
முத்திவகை யிரண்டாகு மவைதாம்-பகர்சீவந்
முத்தியொடு விதேககை வல்யம். 155

அறிவுடையார்க் ககமாந்மா வொடுவருசம்
பந்த-மகறலினாற் பிறருடல்போற் றம்முடலந்



தனிலு, முறுதிதரு மபிமாந மின்மையே யாகி-
யுண்ணுமநு பவவெப்பால் வருபிரா ரத்த,வறுநு
கர்வுண் டாஞ்சுழுத்தி யின்லலியே போல-மந்
தாநு சந்தாந மாதலிற்றே காதி, செறியபிமா
நங்கழன் றுங் கடமுதித்துஞ் சுழலுந்-திகிரி
போல் வாதனையா லுறல்சீவந் முத்தி. 156

பரமமா ஞாநந்தோன் றுதலுமே கதிர்முன்-
பாயிருள்போ லஞ்ஞாநத் றுடனதன்காரியமாம்,
புரமுதலா யினவனைத்து மகன்றிடுதே றுனே-புகல
ரிய விதேககை வல்லியமேன் றிசைப்ப, ருரமுறு
மிங் கிதுவாகச் சீவந்முத்தி யுளதென்-றுரைப்ப
தெவ்வா றெனிற்சயிற்றி னரவமயக் கொழிந்தும்.
வருமதன்கா ரியமாகும் பயகம்ப மாதி-மருவுதல்
போன் ஞாநத்தா லஞ்ஞாநங் கெடினும். 157

அதனதுகா ரியமாகு முடம்பாதி சிற்கு-மத
னுனும் பிரமஞா நந்தோன்றும் பொழுதே, சிதை
தருமஞ் ஞாநமுட னுடம்பொழியு மாயிற்-றிகழ்
பிரம வித்தியா சம்பிரதா யந்தான். கதியொழியு
மதனுலும் பரசிவனற் பிரமன்-கமலனு லுயர்பிர
சா பதியவனன் மநுவரம், புதமநுவான் மநுட

ருணர்ந் தனரெனவே முறைமை - புகல்சுருதி
விரோதமா மதனானு மன்றே. 158

செஞ்ஞானிக் குரித்தாகுஞ் சீவன் முத்தி-சித்
தித்தற் குற்றபிரா ரத்தவா தனையோ, டஞ்ஞான
லேசசற் பரவுடம் பாட்டா-லாகநிலை யுஞ்சீடர்க்
குபதேசா திகமு, மெஞ்ஞான் றுங் கிடைத்திடுமா
லச்சீவன் முத்தற்-கிரிதருஞ்சஞ் சிதமங்கி புகுமுளி
புற் போல, மெஞ்ஞானத் தாற்பிரா ரத்தநுகர்ந்
தொழியு-மேல்வினைகூ டாதநதி காரியா தலினால்,

பெற்றவுயர் ஞானத்தா லொழிந்தவினை தா
னே-பிராப்த போகத்தை யளிக்குமெனி லது
மே,லுற்றவுட லுற்பத்தி தனையுமியற் றுறுமென்-
றுரைப்பில்வறு விதைநுகர்ச்சிக் கன்றியே முளை
க்கு, மற்றதுதான் காரணமன் றதுபோல ஞானி
வருகரும நுகர்ச்சியினா னேயொழிவ தாகி, யற்ற
முறு பிறவிமேல் விளைத்திடுதற் கேது-வாகா
தென் றியம்புறுவ ரறிவறிதக் கவரே. 160

அறைந்தநுகர் வினையதுதான் லோகயாத்
திரைக-ளநதிகரித் துறுநரற்கே யோருடம்பு தன்



னிற்,செறிந்துநுகர் வாமவற்றி னதிகிருதராகிச்-
சிறந்தமா புருடர்க்குத் தசசங்கை யுடம்பி,லுறைந்
தலது தீர்ந்திடா தெளினுமறைப் பின்றி-யுறுத
லா லொருவனுக்கிங் கிளமைமுதற் பேதம், பிறந்
திடினு மவனுக்கோ ருடம்பேயாய் நின்ற-பெற்றி
போ லாகுமென வுணர்ந்திடுக தெரிந்தே. 161

விடயங்க ளனைத்தினுக்கும் பொய்ம்மைசா
திக்கு-மெய்ஞ்ஞானந் தனக்குமவைக் குண்மைசா
திக்கு, முடலினுகர் வினைக்குமொன் றற்கொன்று
விரோத-முண்மையினான் ஞானிக்கு நுகர்வெங்ங
னென்னிற், கெடுகனவு முதலவற்றுண் மைதுனா
திகளாங் - கேடினுகர் வாதல்போற் பிராப்த
போக, விடயங்க ளுண்மையா யலதாகா தென்
னும் - விதியின்மை யானுகர்வு முணர்வுமுர
ணாவால். 162

வந்தமய லொழிந்தளவே யிப்பியிடை வெள்
ளி-மாய்தல்போ லறிவினா லஞ்ஞானங் கெடலு,
மிந்தவுல கதுதோற்ற மேயிலா மையினா-லெங்
ஙனமாம் வினைப்போக நுகர்ச்சியெனி லிப்பி
தந்தவிர சதநிருபா திகப்பிரமை யாகுந்-தன்மை

யா லுணர்ந்தளவில் வெள்ளியுரு வொழியும்,
பந்தமுறு மிதுசோபா திகமாகு மதனாற்-பகர்ந்
ததுபோ லன்றுமற் றெங்ஙனெனி லுரைப்பாம், 163

தடத்தினுயர் கரையமர்வோ னத்தடத்துப்
புனவிற் றானதோ முகமாக விருப்பதுபொய்
யென்று, படைத்தெளி வுளமொடிருப் பினு
மதோ முகமாம்-படிவந்தோன் றுறல்போல மூல
வகங் கார, மடுத்துவரு சீவபா வாதிகமோ மித்
தை - யறிதரியன் றானெனவே யுணரினுஞ்சீ
வாதி, தொடுத்தவுல குறுதலினாற் சீவன்முத்தன்
றனக்குத் - துய்க்கும்வினைப் போகவிவ கார
முடம் பாடாம். 164

சீவன்முத்தற் குரியனவா மைத்திரியே
கருணை-திகழ்முதித முபேட்சையெனுஞ் சற்கு
ணங்க ளாவற்றுண், மேவுறுசற் புருடரொடு நட்பு
மைத் திரியா-மெலிதருதுக் கிகளிடத்தி னிரக்க
மே கருணை, யோவறுநற் புண்ணியர்பால் விருப்ப
மே முதித-முவப்புவெறுப் பிரண்டுமிவா துலகி
லவ மியற்றும், பாவிகளை விடுதலே யுபேட்சை



யென வறிகப்-பயனைந்தச் சீவன்மூத்தற் குளவ
வையீண் டுரைப்பாம். 165

ஞாநரக்கை தவஞ்சகல சம்வாத முடனே
நவிறுக்க வொடுக்கமொடு சுகாவிற்பா வந்தந,
ஞானவற்றுண் மருவும்வா சனையழிவு மநத்தி
னடக்கங்க ளாற்புத்தி நிருமலமா யிருத்தன். ஞாந
ரக்கை மநம்பெகறிகட் யொருமையே தவமா-
ஞாநியென வுலகமெலாம் வழிபடல்சம் வாத,
மானமனக் கிலேசமற லேதுக்க வொடுக்க-மவற்
றினாற் பந்தமறல் சுகாவிற்பா வந்தான். 166

குறிகளோர் பத்துளவாம் ஞாநமயற் கவை
தாங்-குரோதமின்மை வைராக்யம் பொறிபுலன்
க ளடக்க, லறமூதவு சமைதமையே சநப்பிரியத்
துவமோ-டலோபமொடு கொடையபய நிருமத
மென் றறிக, நெறிமருவு சீடரொடு பத்தருதா
சீநர் - நிலையில்பா விகளென்னு நால்வகையோ
நிடத்து, முறையினநுக் கிரகம்வந், துறுமருள்
கொள் சீவந் - முத்தனா லென்பரவை முறையி
னெடுத் துரைப்பாம், 167

தெரிவரிய சீவன்முத்தன் றனைநம்பு மதனாற்
சீடற்கு முத்தியுமன் பொடுவழிபா டதனைப்,
புரியுமுயர் பத்தற்கு நல்வினையு மவன்றன்-புநித
முறு சரிதமது கண்டவுதா சீனர்க், குரியபுண்
ணியவிருப்பு மவன்றன்வடி வினைக்கண்-ணுறு
தன்முத லானவற்குற் பாவிகட்குப் பாவ, விரிவு
முறு மென்பர்தருக் காதியா லாத - லெங்ஙனே
னின் முத்தனாற் பிரமோப தேசம். 168

மறைப்பகலு மொருபிரம சொருபமா தவி
ஞன் - மகிழ்ச்சிவெறுப் பிலாவீசற் கநுக்கிரகஞ்
செயவு, மொறுப்புறவும் வரும்வினையி னொராலத்
தொழில்க-ளுறுதல்போற் சாதகர்தம் பக்குவபே
தத்தாற், சிறப்புறுசல் லுபதேசா திகண்ஞாநிக்
கெய்துஞ்-செப்பியவிவ் விலக்கணமொ டிராது
பல முறையாற், றறப்பிலருட் சீவன்முத்த ரிருப்ப
தென்கொ லென்னிற் - றுணிவுதோன் றுறமு
துநூ றெருகுத்தபரி சுரைப்பாம். 169

வந்தணையும் பிரரப்த வாசனைதீ விரமே-
மத்தியமந் தஞ்சுத்த மெனவொருநான் காகும்,
பந்தமறு ஞாநியா யினும்போகத் தழுந்திப்-பசுப்



போலத் தன்மகிழ்ச்சி மாத்திரமா யிருத்தன்,முந்
துரைசெய் தீவிரம்போ கச்சிறப்பற் றிடினு-
மொழியாந்ம தற்பரனாய் விநோதமே புநித்து,
மைந்தரென விருத்தன்மத தியம்போக மனைத்து-
மாற்றிமிது நம்போ லாநந்தமுறன் மந்தம் 170

உலகவழக் ககன்றுநிரு பாதிகாக் மாவி-
லுற்றதற் டரனுகிப் பரமுத்த னெனவே, யிலகு
சுகத் துடனிருத்தல் சுத்தவா சனையா-மென்பரிந்
நால் வகையாகுங் கருமவா சனையாற், றலைமை
கொண்முத் தர்கள்வே றுவேறுய வொழுக்கஞ்-
சாரினுஞ்செந் நெறிகோண நெறிபெருமா நதிக,
ளலைகடலிற் புகுதல்போன் முடிவினின் மெய்ப்
பரமா-யமந்தருநன் முத்திசுக மொருபரிசென்
றறியே 171

இச்சையுட னிச்சைபிற ரிச்சையெனு
மிவற்று-லியம்பலுறு பிராரப்த மூன்றுவகைப்
படுமா, லச்சுரர்க ளானும்விலக் குதற்கரிய வாகு-
மபத்தியஞ்செய் திடறனக்கே கேடனவிங்
கறிந்து, வைச்சுமது புரிவித்த விச்சைசெய்யே
னெனினு-மன்னவர்தம் மாணைபோற் செய்வித்த

லநிச்சை யிச்சையநிச் சைகளின்றி யிருந்துமப
லோரா - வின்பதுன்ப நுகர்வித்தல் பிறரிச்சை
வினையாம். 172

இப்பரிசு மூவகையாம் பிராரப்த வினைவந-
லெண்ணில்பல வொழுக்கமாஞ் சீவன்முத்தர் கிந்
த, மெய்ப்பொருளை வசிட்டனு ரதன்றுருவா சன்
சீர்-வியாதனொடு சுகன்வாம தேவனருட் சநக,
னொப்பரிய பரதனெழிற் சௌநகனே முதலா-
யுளர்வருத்த நாபேத முணர்த்தலுறு மிங்ஙன்,
றுப்புதவு பிராரப்தங் கொளினஞ்ஞா நிக்குஞ்-
சுத்தனுக்கும் வேறுபா டெங்ஙனெனின் மொழி
வாம், 173

மண்ணுலகில் விராத்திரியர் சோத்திரியர்
தமக்கு-மறையொழித லோதலா லன்றியுணன்
முதலா.யெண்ணவருஞ் செயலான்வே றிலாமை
யது போல-விதயந்த முறலொழித லாலன்றிப்
போக, முண்ணுநிலை யதனுலஞ் ஞானமுடை
யோர்க்கு - முணர்வுமய மாய்நின்ற சீவன்முத்தர்
தமக்கு நண்ணிவரும் வேறுபா டிலையெனவே
நவில்வர்-ஞானநூல் பலவுணர்ந்த நல்லுணர்வி
னவரே, 174



தத்துவஞா நத்தினுற் பிரமமடைந் திடுமேற்-
றறுகண்வரிப் புலிகண்டோன் போற்சீவத் துவத்
தை, யத்தலையே யழித்திடுமா தலினுலச் சீவ-
னழிவுதனக் குடன்படுமோ வெனிற்கவுட் டன்
மைக், குய்த்தவா த்ரவினுற் கங்கைமுத லவற்று-
ளொழிப்பதனுக் கிசைவர்நாத் துவமதுபோ
லென்றும், பொய்த்தவிலத் துரியவடி வாம்பிர
மத் துவத்திற்-பொருந்தத்தன் கேட்டினுக்கிங்
குடம்படுஞ்சீ வன்றான். 175

வாதராயணன்முதலோர் போற்சாப முட
னே-மற்றருள்செய் வலியுடையோன் றத்துவஞா
நத்தோ, னேதிலா னலனெனிலவ் வலிதவத்தின்
பலமா-மிலங்குதத் துவஞாந பலமன்று மயின்,
மாதவமே ஞானத்திற் கேதுவெனுஞ் சுருதி-வழக்
கினுற் றவமிலர்க்குத் தத்துவஞா நந்தா, னேமெத
னிவாஞ் சபாதிக் குச்சாகா மியமே-யேதுநிட்கா
மியதவஞா நத்தினுக்கென் றறியே. 176

வேதவியா சாதிகட்கு ஞானம்வலி யிரண்டு-
மேவுமே யெனிலவர்கட் கிருதவமு முளவா,மாத
லினா லவ்விரண்டு மாகுமொரோர் தவமே-யாயி
னெவ்வொன் றேயடையு மதனான்மா றின்றா,
மேதையாஞ் சாபாதி வலியிலர்க ளாகி-விதியிறத்
துவஞானி களைகிரியா நிட்ட, ரோதுவார் நிந்தை
யெனி லவர்தயக்கும் விடயத்-துழல்பவரா னிந்
தையா தலிற்குறைவின் றாமால் 177

உலகிறந்த சீவன்முத்த னுகர்வினைவா சனை
யா-லுண்பொருள்கள் பலகவர்ந்து மௌனமே
யுற்றும், பலதிறங்கண் மொழிந்துமுப தேசநெறி
புரிந்தும்-பரிதபித்து மகிழ்ந்துமிகு வேடங்கள்
புனைந்துங், கலைதுறந்து முடையுடுத்துங் கல்வி
பல பயின்றுங்-கல்லாத் பாதர்முயக் கிடையுற்று
மிவ்வா, றலகிறந்த நடையுறினு மருள்விளையாட்
டென்றே-யவன் றனைநம் புகவைய மொருசிறிது
முறாமல்- 178

என்றுமெவ் விடத்தினுமோ ருடம்புமுறா
தொன்றா-யிருந்தசச்சி தானந்த சிவசொரூப மாத.



னன்றிதருவிதேககை வல்லியமென் றிசைப்பர்.
நவின்றவிதை யெய்துமா றெவ்வாற்றா னென்
னிற், பொனன்றவினித் தியகருமா னுட்டானந் தன்
னாற்-புண்ணியமப் புண்ணியத்தாற் பாவமொழி
வதனாற், குன்றலறு சித்தசுத்தி யதனாற்பொய்க்
குடும்பக்-குற்றநிகழ் வதனான்மெய்த் துறவுதற
வதனால். 179

முத்திவிருப் பதனானே புறக்கரும மொடுக்க
மொழிந்ததனால் யோகநிலை முயற்சியது தன்னாற்,
பொய்த்தலறு துரியவிழை வத்துரிய விழைவாற்-
புகலருமா வாக்கியவா ராய்ச்சியத னானே, யத்து
வித ஞானமத னாலவித்தை நாச-மதனாற்பொய்த்
துவிதமயக் கழிதலத னானே, மெத்துசுக துக்க
நினை வொழிவதனால் விருப்பு-வெறுப்பறுத
லதனாலொணா விதிவிலக்கோய் வதனால், 180

வினையிரண்டு மகறலதனாற்றிறக பாவ-விச்
சிந்தி யதனானே பாசமெலா மொழிதல், பினை
யறைந்த வதனானே பராபரமாய் முடிவாய்ப்-
பெயர்சாதி குறிபெறா தொன்றாகி வாக்கு, மநமி

றந்து நித்தியா நந்தமய மாகி-மறிவிலா விதேக கை வல்லியம்வந் தெய்து, மௌனவறிந்து தணிந் திடுக சுருதிகுரு பரனு-லின்பவீ டடையுநெறி விரும்புறுமுத் தமரே. 181

வேதமுத லாகியநூ லனைத்தினுஞ்சொல் பொருளை - விளங்கியிடக் கரதலா மலகமெனக் காட்டிப், போதமய மாகியபே ரானந்தத் தழுத் தும்-பொருவிகந்த விந்நூலை முத்திபெறற்குரிய, சாதநநான் கினையுமடைந் தெவரானு மென்றுந்- தடுப்பரிய பிறவிநோய் தனிப்பதனுக் கெண்ணி, யாதரவி னருட்குரவன் றனைத்தேடி யுருகு-மன்பு டையோர் தமைக்காணி னளித்திடுக வுவந்தே.

வேதாந்த சூடாமணி முற்றுப் பெற்றது.

பாயிரம் உள்படச் செய்யுள் 184.

சர்வஞ்சின்மயம்.

---



## முதற் குறிப்பு அகராதி.

49 முதல் எழுத்தைக் கொண்டது.

## முதல் நினைப்புக் கவி 185.

### எண் சீர்க் கழி நெடி லடி ஆசிரிய விருத்தம்.

உலதருண அருமறை சீர்வேத சாற்றி
உரைத்தஅப் பிரவாய்த்த விடயமது நித்தி,
சலசமை ஆத்தஉடம் பினைமூட உலக
சாதரு சகநானு அனையவன அறிய,
நிலசுடமு பகர்இங்கி புகலலதி ருந்தி [மதிதத,
நிரவயவ சுருதிஅத்தி யாரோப ஆகமுத
உளவெம்மை ஆதவிசீ வன்மாது விரியும்
உரைசாற்ற பெற்றதாய் நீர்விழு ஒலாவே. (1)
ஒலா அருவி சூத்திசித் திரஅகிவி ரிஞ்ச
ஓர்வடிசித் திறநீங்கி யவிபோற்றி நியம,
விலாமிகும சிவஞென் ஈசன்வடி இந்து
விளங்(கு)அனைய பிரமொடு விண்சீவசேத,
அலாவிரிபொய் புலமில்கந மாயைவரு அப்ப
அவித்தைஇரு கொன்மக உரைப்பசத் துவகு,
துலா அப்பெ இகரண புத்திஅங்கி நின்றி
தும்மல்சாற் றின்கந்த ஈங்குதெரி அவிவே. (2)
அவிசுருதி விருத்திபொய்ப்ப பொருள்இறைவஈச
அப்பொருள் அண்சிவ பரதீவி பற்றி
மெலிநெருப் ஆங்கார மைந்தர்பெரும் பஞ்ச
மேய்ந்ததிரி அநுபவவி லங்குசொற் அந்த,



நலிமன்ற அங்நஇருந் தவாசீல வெயிலி
நடுக்கசொப் பநஇத்தி வெப்பினேன்
விலிபுன்க ருத்தனு துரியகட சங்க [இசைப்பில்,
விரிந்தஉரை அரைதற்ப கங்கையினில் ஒலுவே. (3)
ஒலுமுன்ன விருத்ததற் பதஇகலி தூய
ஒருமலர் கடத்தொடுங் அவ்அருமை சூத,
செலுவனை அவைகூறு கடத்தினுக் இந்த
செப்பதரு ஓங்கார அன்றியப கர்ந்த,
சலுமடிவி பந்தம்வேண் டும்தகக குறைய
சாற்றமரு வலுஉண்டி கடாதிவிட சச்சி,
தலுசங்க தக்கமா மித்தையெனு ஞான
எல்தத்து வந்துசிமுற் அறிபரம வலையே. (4)
வலைஅதன செஞ்ஞாநி பெற்றஅறை விடய
வந்தம தடத்திசீ வஞ்ஞாந குறிகள்,
இலைதெரிவ மறைப்பவந் தனைஉலக இச்சை
இப்பமண் தத்துவ வாதாரா வேத,
நுலைஉலகி என்றமுத் திவினைவேத நூற்றெண்
பத்தைந்து கவியினுட் பொருளினைத் திரமும்,
தலைவர்கள் நினைந்துதொழு மாதேவ சேவன்,
தண்ணழித் தோடவிழ் கமலம்வா ழியவே. (5)
ஆக விருத்தம் 5க்கு நினைப்புக் கவி185,

| | | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 2 | 2 | விவேகா | விவேக |
| 3 | 12 | சிநதர | சித்தா |
| | 14 | பரிக்சேத | பரிச்சேத |
| 4 | 20 | பதனுல | பதனுல் |
| 5 | 1 | தெறித்த | தெரித்த |
| | 7 | மெடுயிர் | மொடுயிர் |
| | 13 | ஒன்று | என்று |
| | 15 | இங்ஙன | எங்ஙன |
| | 20 | யிவையைச் | யிவையைந் |
| 6 | 8 | தாகந | தாகந் |
| | 13 | சடுமாய் | படுமால் |
| 7 | 11 | ஆததமுடன் | ஆத்தமுடன் |
| 8 | 16 | 41 | 11 |
| 9 | 8 | உறிடுபவன் | கூறிடுபவன் |

1

| | | பிழை. | திருத்தம் |
|---|---|---|---|
| | 12 | வறைகுவர் | றறைகுவர் |
| | 15 | சீவந | சீவர் |
| 10 | 5 | கிடை | முடை |
| | 15 | குாவ | குரவன் |
| | 20 | னுத்தேச | லுத்தேச |
| 11 | 2 | விலக்கன | விலக்கண |
| | 7 | என்றே | அன்றே |
| | 14 | யுச | யுறு |
| | 18 | தத்தன்னெனி | தத்தனெனி |
| 12 | 3 | துதவே | துதலே |
| 13 | 8 | ஞிமிறின்ங்கள் | ஞிமிறினங்கள் |
| | 17 | யுஞ்ச | யுந்த |
| | 18 | சிதந | சிதா |
| 14 | 9 | மத்சி | மத்தி |

| | | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| | 10 | விளத்தத் | விளத்தல் |
| | | றுணர்ந்தலில் | றுணர்த்தலில் |
| 16 | 7 | அனவு | அளவு |
| | ,, | போதி | போது |
| | 13 | வச்சிந்தா | வச்சிங்கா |
| | " | மெடு | மொடு |
| | 16 | டத்துனிதம் | டத்துவிதம் |
| | ,, | ஒனு | எனு |
| | 20 | தமி | துமி |
| 17 | 18 | பரிக் | பரிச் |
| 21 | 7 | குவிர் | குளிர் |
| | 11 | கிலர் | கிலா |
| | 12 | தோவரும் | தேர்வரும் |
| 22 | 13 | ரூபாய் | ரூபமாய் |

2

| | | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 2 | 26 | கிலேவுல | கியவுல |
| ,, | 9 | பேல | போல |
| 29 | 9 | பெரரு | பொரு |
| 31 | 14 | சீவச்ம் | சீவசம் |
| ,, | 16 | கும | கும் |
| 33 | 19 | கச்யிற் | கயிற் |
| 38 | 9 | ருயினு | லாயினு |
| 40 | 18 | றிலரமை | றிலாமை |
| 42 | 13 | பதிக் | பதித |
| " | 17 | வித்கையுங் | வித்தையுங் |
| 43 | 9 | லக்ங் | லாங |
| 48 | 12 | முதமன | முதலன |
| 52 | 3 | கியமாம | கியமாம் |
| 53 | 16 | வினய | லினய |
| 56 | 18 | வெதித்றத்து | பெத்திறத்து |

| | | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 58 | 9 | றக்கஞு | றக்கஞ் |
| ,, | 20 | மாமிறனமா | மாமிறன்மா |
| 59 | 5 | மகிந்து | மகிழ்ந்து |
| 60 | 10 | பருமைகா | புருமைகா |
| 65 | 12 | பளகயை | பகையை |
| 69 | 14 | யலதாகர | யலதாகா |
| 70 | 8 | றுறல் | றுதல் |
| ,, | 16 | நடபு | நட்பு |
| ,, | 19 | மில்ா | மிலா |
| 71 | 4 | வந்தர | வந்தா |
| ,, | 7 | பொறி | பொறி |
| ,, | 13 | வறமுதவு | வறமுதவு |
| ,, | 17 | நிடத்து | ரிடத்து |
| 73 | 4 | புறிந்து | புரிந்து |
| ,, | 7 | பாதிகாச் | பாதிகாந் |
| ,, | 13 | கடவிற் | கடலிற் |
| 74 | 5 | விளவர | விளவா |
| 75 | 15 | தவத்திள | தவத்தின் |
| ,, | 19 | ணிவாஞ் | ணிலாஞ் |
| 77 | 9 | மூதகி | முதகி |
| ,, | 15 | விருப்யு | விருப்யு |

---

| | | | |
|---|---|---|---|
| 17 | வேதாந்த சூடாமணி, சந்தோஷ தாயினி உரை | 0 | 50 |
| 18 | மகா ராஜத் துறவு-மகப் பிரசாதினி உரை | 5 | 00 |
| 19 | பக்தி (வைராக்ய) சதகப் பத உரை, பொழிப் புரை | 2 | 00 |
| 20 | மேற்படி உரை, உதாரணக் கவி பக்திரச உரை | 1 | 50 |
| 21 | வைராக்ய தீபம், பத உரை, பொழிப்புரை | 1 | 00 |
| 22 | மேற்படி உரை உதாரணக் கவி சுடர் உரை | 0 | 50 |
| 23 | சீடாசாரம், பால போதினி உரை | 1 | 00 |
| 24 | திரு எம் பாவை, திருப் பள்ளி எழுச்சி மணி மாலை, சிறு சுடர் உரை | 0 | 50 |
| 25 | பக்தி சதக தோத்திரம்-தோத்திரப் பிரகாச உரை | 0 | 75 |
| 26 | மந்திர உபதேசம் வசநம் | 0 | 19 |
| 27 | சூட்டுக் கோல், கட்டாரி, புச்சம், கண்டநம். வசநம் | 0 | 25 |
| 28 | திரு எம் பாவை-திருப் பள்ளி எழுச்சி பத உரை | 1 | 00 |
| 29 | திருக் களர், வீர சேகர ஞான தேசிகர் சரிதம் வசநம் | 0 | 25 |
| 30 | மார்கழித் திங்கள் பாராயண மஞ்சரி கவி (62) | 1 | 00 |
| 31 | மஹாத்ம சரிதாமிருதம் 80 பெயர் சரிதம். வசநம் | 0 | 50 |
| | | 5 | 00 |

| | | |
|---|---|---|
| 32 | ஒன்பது துறவியர் பாடிய அருட்பா மாலை கவி 280 | 1 00 |
| 33 | வேதாந்த சாஸ்திர ரத்நாவலி (9) சேர்ந்தது | 3 00 |
| 34 | வேதாந்த சாஸ்திர ரத்நத் திரயம், விவேக சூடாமணி கவி 671, அஞ்ஞ வதைப் பரணி கவி 494, பஞ்ச தசி கவி 796 (3)சேர்ந்ததுகவி (1961) | 3 00 |
| 35 | கைவல்ய நவநீதம் கவி 288 | 0 50 |
| 36 | பகவற் கீதை கவி 545, 1 25. 4 பஞ்ச தசி கவி 796 | 0 62 |
| 37 | பிரஹ்ம கீதை கவி 547, | 0 38 |
| 38 | வாசிட்டம் கவி (2055) | 2 25 |
| 39 | கோவிலூர் மடத்தின், அத்புத மகிமா அகூபாரம் | 0 75 |
| 40 | கைவல்ய நவநீதம், தத்துவார்த்த தீபிகை உரை உதாரணக் கவி 233-க்கு, ஆதித்தன் உரை | 2 50 |
| 41 | ஈசுவர கீதை, ரஹஸ்யார்த்த விளக்க உரை | 2 50 |
| 42 | சதுர்த் தச விஷயாப் பிரகாசிகை | 0 50 |
| 43 | ஈசுவர கீதை கவி 338, | 0 25 |
| 44 | கைவல்ய நவ நீதம், கிருத பாஷ உரை | 3 00 |
| 45 | கைவல்ய நவநீதம், பத சார உரை | 3 50 |
| 46 | கைவல்ய நவநீத ஆராய்ச்சி | 0 50 |
| 47 | ஸ்தோத் திரயம் மூன்று சேர்ந்தது | 3 00 |